மம். மாஹாத்ம்யத்தில் இதுக்கு ஸமானமாவது இதை யதிகரித்ததா வதுவேறொரு மந்த்ரம் கிடையாது. இதை யொருகாலுச்சரித்தால் உடனே ஸம்ஸாரத்தை யறுத்துவிடும். இதரமான எல்லா மந்த்ரங்க ளினாலும் போக்கத்தக்கதாயும் போக்கத்தகாததாயுமுள்ள ஸகல பா பங்களையும்போக்கி அவைகளால் ஸாத்யமாயும் அஸாத்யமாயுமுள்ள ஸகல பலங்களையும் தானொன்றே கொடுக்கும். இது ஸர்வேஶ்வர னுக்கு மிகவும் ப்ரியமானது. இதை ருஷி, சந்தஸ்ஸு, தேவதை, அங்கந்யாஸ கரந்யாஸங்கள், முத்ரை, இவைகளுடன் உபதேசித்து அர்த்தத்தையும் தானே உபதேசிக்கவேண்டியது. அங்கந்யாஸ கர ந்யாஸங்கள், முத்ரை, சந்தஸ்ஸு, தேவதை, இவைகளில்லாமல் வெறும் மந்த்ரத்தை யுச்சரித்தாலும் இதர மந்த்ரங்களின் ஸித்தியினு லுண்டாகும் பலத்தை யடைவன். கநி.

అనధీత్య ద్వయంమన్త్రం నవిప్రో వైదికోభవేత్।
మన్త్రరత్నేనరహితం బ్రాహ్మణం దూరతస్త్యజేత్॥ ౧౬.

அநதீத்யத்வயம்மந்த்ரம் நவிப்ரோவைதிகோபவேத்।
மந்த்ரரத்நேநரஹிதம் ப்ராஹ்மணம்தூரதஸ்த்யஜேத்॥ கசு.

தா-ம். த்வயமந்த்ரத்தை நியமத்துடன் ஆசார்யனிடத்தி லிரு ந்து எவன் க்ரஹிக்கவில்லையோ? அவன் ப்ராஹ்மணகுலத்திற் பிற ந்த போதிலும் வேதோக்தமான ஒரு கர்மங்களுக்கு முபயோகியாக மாட்டான். ஆகையால் அவனை தூரத்திலே விட்டுவிடவேண்டியது.

అధ్యాపయేద్ద్వయంమన్త్ర మాచార్య శ్శిష్యవత్సలః।
అధ్యాపయేత్తతః పశ్చాన్మన్త్రమష్టాక్షరంతథా॥ ౧౭.

அத்யாபயேத்த்வயம் மந்த்ர மாசார்யச்சிஷ்யவத்ஸலஃ।
அத்யாபயேத்ததஃ பச்சாந மந்த்ரமஷ்டாக்ஷரம்ததா॥ கஎ.

தா-ம். ஆசார்யன் சிஷ்யனிடத்தில் ப்ரீதியுடையனாய் த்வயமந் த்ரத்தை முன்னே உபதேசித்து அதுக்கநந்தரத்தில் அஷ்டாக்ஷர த்தையும் ந்யாஸம் முத்ரை ருஷி தேவதைகளோடு உபதேசிக்க வேண்டும். கஎ.

అచక్రధారిణం విప్రం యోఽధ్యాపయతి దేశికః।
సగురు ర్నరకంయాతి కల్పకోటిశతంద్విజాః॥ ౧౮.

அசக்ரதாரிணம்விப்ரம் யோத்யாபயதிதேசிகஃ
ஸகுருர்நரகம்யாதி கல்பகோடிசதம்த்விஜாஃ ௧அ.

தா-ம். எந்த ஆசார்யன், ஸமாஶ்ரயணமில்லாத ப்ராஹ்மணனுக்கு மந்த்ரத்தை யுபதேசிக்கிறானோ? ருஷிகளே! அவன் நரகத்தை யடைந்து அநேக கல்பங்கள் அங்கேயே வஸிப்பன். ௧அ.

తస్మా త్తాపాదిసంస్కారా స్సర్వమన్త్రేషుస త్తమాః ।
అధ్యాపయే త్తతఃపశ్చా దన్యథా నరకం వ్రజేత్॥ ౧౯.

தஸ்மாத்தாபாதிஸம்ஸ்காராஸ் ஸர்வமந்த்ரேஷு-ஸத்தமாஃ|
அத்யாபயேத்ததஃ பஶ்சாதந்யதாநரகம்வ்ரஜேத்|| ௧௯.

தா-ம். ஆகையால் ஸமாஶ்ரயணம் முதலான கீழ்ச்சொன்ன ஸம்ஸ்காரங்கள் எந்தமந்த்ரத்தை யுபதேசித்துக் கொண்டபோதிலும் அவஶ்யம் செய்துகொள்ளத் தக்கதுகள். அவைகளைச் செய்தே மந்த்ரத்தை யுபதேசிக்கவேண்டும். இல்லாவிடில் நரகத்தை யடைவன்.

ఏకస్మిన్దివసేవాపి కృత్వాతాపాదిసంస్క్రియాః॥
పృథక్పృథక్చానుపూర్వ్యా సర్వఙ్కుర్యా దతన్ద్రితః॥ ౨౦.

ஏகஸ்மிந்திவஸேவாபி க்ருத்வாதாபாதிஸம்ஸ்க்ரியாஃ|
ப்ருதக்ப்ருதக்சாநுபூர்வ்யா ஸர்வங்குர்யாததந்த்ரிதஃ|| ௨0.

தா-ம். ஸமாஶ்ரயணம் முதலாகச் சொல்லப்பட்ட ஸம்ஸ்காரங்களை யெல்லாம் ஒருதினத்திலாவாது, வெவ்வேறு தினங்களிலாவது, சொன்ன க்ரமப்படி ஒன்றும் விடாமல் செய்யவேண்டும். ௨0.

అధీత్య మన్త్ర మాచార్యం పూజయే ద్భక్తితో ద్విజః।
ఆచార్యాధీనవృత్తిస్తు యావజ్జీవం భవేత్సదా॥ ౨౧.

அதீத்யமந்த்ரமாசார்யம் பூஜயேத்பக்திதோத்விஜஃ|
ஆசார்யாதீநவ்ருத்திஸ்து யாவஜ்ஜீவம்பவேத்ஸதா|| ௨௧.

தா-ம். சிஷ்யன் மந்த்ரத்தை நியமத்துடன் கற்றபின்பு ஆசார்யனை பக்தியுக்தனாய்ப் பூஜிக்கக்கடவன். அநந்தரம் ப்ராணனுள்ள வளவும் எப்போதும் ஆசார்யனுக்குப் பரதந்த்ரமான வ்ருத்தியையுடையனா யிருக்கக்கடவன். அதாவது - ஆசார்யன் அமுதுசெய்த பின்பு அந்த சேஷத்தைத் தான் புஜித்தல், அவனைக் காட்டிலும் தாழ்ந்த இடத்தில் உட்கார்தல், படுத்தல், பின்செல்லல், ஸமித்து குசம் திருத்துழாய் இவைகளைக்கொண்டு தருதல், இவை முதலானவைகள்.

హోమశేషంసమాప్యాథ బ్రాహ్మణాన్భోజయేచ్ఛుభాన్।
యావచ్ఛరీరపాతన్తు ద్వయమావర్తయేన్మనుమ్॥ ౨౨.

ஹோமசேஷம்ஸமாப்யாத ப்ராஹ்மணாந்போஜயேச்சுபாந்|
யாவச்சரீரபாதந்துத்வய மாவர்தயேந்மநும்|| ௨௨.

தா-ம். சிஷ்யனுக்கு ஆசார்யன் பக்கல் செய்யவேண்டும் முறையைச் சொல்லி ஸம்ஸ்காராந்தத்தில் ஆசார்யன்செய்யவேண்டும் க்ருத்யத்தைச்சொல்லுகிறார். மந்த்ரோபதேசாநந்தரத்தில் செய்யவேண்டும் ஹோமத்தைச் செய்து முடித்து நல்லொழுக்கமுடைய ப்ராஹ்மணோத்தமர்களை அமுது செய்விக்கவேண்டியது. பிற்பாடுசரீரமுள்ளளவிலும் மந்த்ரராஜனை த்வயத்தை அநுஸந்திக்கக் கடவன்.

ఇతి శ్రీపరాశరస్మృతావుత్తరఖణ్డేమన్త్రసంస్కార
వర్ణనన్నామతృతీయోఽధ్యాయః,

௩-வது அத்யாயம் முற்றிற்று.

---

## ௪ - வது அத்யாயம்.

---

### யாகஸம்காரத்தின் க்ரமம்.

శ్రీపరాశరఉవాచ.

శుభకాలే విధానేన ప్రణిపత్య తతో గురుమ్।
అస్యప్రసాదలబ్ధన్తు గృహీత్వావిగ్రహంహరేః॥ ౧.
శ్రీభూమినీళాసహితం సాయుధంసపరిచ్ఛదమ్।
అర్చయేద్విగ్రహన్నిత్యం యావత్కాలమతన్ద్రితః॥ ౨.

ஸ்ரீபராசரஉவாச

சுபகாலேவிதாநேந ப்ரணிபத்யததோகுரும்|
அஸ்யப்ரஸாதலப்தந்து க்ருஹீத்வாவிக்ரஹம்ஹரே:||
ஸ்ரீபூமிநீளாஸஹிதம்ஸாயுதம் ஸபரிச்சதம்|
அர்ச்சயேத்விக்ரஹந்நித்யம் யாவத்காலமதந்த்ரித:|| ௨.

தா-ம். பராசரர் சொல்லுகிறார்.—தாபம் முதல் மந்த்ரக்ரஹணபர்யந்தமான நாலு ஸம்ஸ்காரங்களுக்குப் பிற்பாடு, சுபமான திதி

வாரநக்ஷத்ரங்கள் கூடின தினத்தில் நித்யகர்மங்களை யனுஷ்டித்தவ
னாய் ஆசார்யன் ஸந்நிதியில் தெண்டன் ஸமர்ப்பித்து அவனநுக்ரஹி
த்துக்தந்த பகவானுடைய அர்ச்சாவிக்ரஹத்தை, ஸ்ரீதேவி பூதேவி
நீளாதேவிகளென்ன, திருவாழி முதலான ஆயுதங்களென்ன, அநந்
தன் முதலான பரிஜநங்களென்ன, இவைகளுடன் கூட எழுந்தருளப்
பண்ணிக்கொண்டு ஆயுஸ்ஸுள்ள வரையிலும் சோம்பலைவிட்டுத்
திருவாராதநம் செய்யக்கடவன்.

శ్రౌతస్మార్తాగమోక్తానాం గృహీత్వాసమ్మతంగురోః।
అర్చయేచ్ఛ్రద్ధయానిత్యం దేవన్దహరవాసినమ్॥ ౩.

ஶ்ரௌதஸ்மார்தாகமோக்தாநாம் க்ருஹீத்வாஸம்மதம்குரோ:।
அர்ச்சயேச்ச்ரத்தயாநித்யம் தேவந்தஹரவாஸிநம்।। ௩.

தா-ம். வேதங்களிலும் தர்மசாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஞ்சராத்ர
த்திலும் சொல்லப்பட்ட திருவாராதந க்ரமங்களில் தன்னுடைய
ஆசார்யனுக்கு எது இஷ்டமோ? அந்த க்ரமத்தினால் ஸர்வாந்தர்யா
மியான ஸ்ரீமந்நாராயணனை மிக ஶ்ரத்தையுடன் தினந்தோறு மாராதி
க்கக்கடவன். ௩.

అర్చయేత్పూర్వవత్స్నాత్వా హరేస్సంపూజ్యవిగ్రహమ్।
హోమం కుర్యాద్విధానేన శ్రీమదష్టాక్షరేణవై॥ ౪.
మన్త్రద్వయేనచతథా హోతవ్యంవిధినాహవిః।
సూక్తేనచతథా హోమఃపౌరుషేణవిధీయతే॥ ౫.
శత మష్టాక్షరా ద్ధోమో మన్త్రాభ్యాఞ్చ తథోదితః।
సూక్తేనప్రత్యృచం హోమే హోతవ్యందధినాహవిః॥ ౬.
తత్తన్నామ్నా తథైవైకముద్దిశ్యానరణాన్సురాన్।
హుత్వాప్రదక్షిణఙ్కృత్వానమస్కృత్వాజనార్దనమ్॥ ౭.
తస్మైతద్విగ్రహన్దత్వావృత్తిం సమ్యక్ప్రచోదయేత్।

அர்ச்சயேத்பூர்வவத்ஸ்நாத்வா ஹரேஸ்ஸம்பூஜ்யவிக்ரஹம்।
ஹோமங்குர்யாத்விதாநேந ஶ்ரீமதஷ்டாக்ஷரேணவை।। ௪.
மந்த்ரத்வயேநசததா ஹோதவ்யம்விதிநாஹவி:।
ஸூக்தேநசததாஹோம: பௌருஷேணவிதீயதே।। ௫.

சதமஷ்டாக்ஷராத்ஹோமோ மந்த்ராப்யாஞ்சதத்ஸ்ததஃ|
ஸூக்தேநப்ரத்ய்ருசம்ஹோமே ஹோதவ்யம்விதிநாஹவிஃ|| ௬.
தத்தந்நாம்நா ததைவைக முத்திஸ்யாவரணேஸ்வராந்|
ஹுத்வாப்ரதக்ஷிணங்க்ருத்வா நமஸ்க்ருத்வாஜநார்த்தநம்|| ௭.
தஸ்மைதத்விக்ரஹந்தத்வா வ்ருத்திம்ஸம்யக்ப்ரசோதயேத்|

தா-ம். ஆசார்யன் ப்ராதஃகாலத்தில் ஸ்நாநம் முதலான நித்ய கர்மங்களை யநுஷ்டித்து, சிஷ்யனுக்கு எழுந்தருளப் பண்ணிக்கொடுக்கவேண்டிய திவ்யமங்கள விக்ரஹத்துக்குத் திருவாராதநம் கண்டருளப்பண்ணி, விதிபூர்வகமாய் ப்ரதிஷ்டை பண்ணப்பட்ட அக்நியில் ஸ்ரீமதஷ்டாக்ஷரத்தினாலும், த்வயத்தினாலும், புருஷஸூக்தத்தினாலும் ஹவிஸ்ஸை ஹோமம் பண்ணவேண்டியது. அதில் திருவஷ்டாக்ஷரத்தினாலும் த்வயத்தினாலும் நூறுநூறு ஆவ்ருத்தியும், புருஷஸூக்தத்தினுடைய பதினாறு ருக்குக்களினால் பதினாறு ஆவ்ருத்தியும் நியமத்துடன் ஹோமம் செய்யவேண்டியது. விமாநபாலகர்களென்ன, ஸூதர்ஸநாநந்த கருடாதிகளென்ன, பகவானை யநுஸரித்திருக்கிற இந்த தேவதைகளை யுத்தேசித்து ஒவ்வொரு ஆவ்ருத்தி அவ்வவர்கள் நாமங்களினாலே ஹோமம் செய்யவேணும். ஹோமம் முடிந்த பின்பு பகவத் விக்ரஹத்தையும் அக்நியையும் ப்ரதக்ஷிணம் பண்ணி, தெண்டன் ஸமர்ப்பித்து, அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை சிஷ்யனுக்கு எழுந்தருளப்பண்ணிக் கொடுத்து எப்போது மாராதிக்கும்படி நன்று யுபதேசிக்கக்கடவன். ௭௨.

యజ్ఞకర్మవిధానేన సమ్యక్స్నాత్వా గురుస్తదా॥ ౮.
యాజయేద్వైష్ణవం భక్త్యా వైష్ణవాన్పరితోషయేత్।

யஜ்ஞகர்மவிதாநேந ஸம்யக்ஸ்நாத்வாகுருஸ்ததா|| ௮.
யாஜயேத்வைஷ்ணவம் பக்த்யாவைஷ்ணவாந்பரிதோஷயேத்|

தா-ம். ஆசார்யன் மாத்யாஹ்நிக ஸ்நாநத்தைச் செய்து அப்பொழுது யாக ஸம்ஸ்காரத்திற் சொல்லிய விதிப்படி வைஷ்ணவனை சிஷ்யனைக்கொண்டு பகவதாராதநமாகிற யாகத்தைச் செய்விக்கவேண்டியது. அநந்தரம் பக்தியுக்தனாய் ஸ்ரீவைஷ்ணவர்களை யமுது செய்விக்க வேண்டியது. ௮௨.

ఏవం యాగాన్తసంస్కారం కృత్వాసిద్ధిపద్ద్విజాః॥ ౯
బ్రాహ్మణానాం విశేషేణ పారమార్థ్యం స్వసిద్ధయే।

ஏவம்யாகாந்தஸம்ஸ்காரா: கர்த்தவ்யா விதிவத்த்விஜா:|| ௯.
ப்ராஹ்மண்யாய்விசேஷேண பாரமைகாந்த்யஸித்தயே|

தா-ம். மஹர்ஷிகளே! இவ்விதமாய் தாபம் முதல் யாகம்வரையிலுமான ஸம்ஸ்காரங்களை ஸர்வேச்வரனிடத்திலேயே அந்தரங்கதை ஸித்திக்கைக்காக எல்லாரும் விதிபூர்வமாய்ச் செய்து கொள்ள வேணும். அதிலும் ப்ராஹ்மண்யத்துக்கு இவைகள் முக்யகாரணமாகையால் ப்ராஹ்மணர்களவச்யம் செய்துகொள்ளவேணும். ௯௨.

ఇతి శ్రీపరాశరస్మృతౌ వృత్తరఖణ్డే విశిష్టపరమధర్మశాస్త్రే
యాగసంస్కారవర్ణనన్నామచతుర్థోఽధ్యాయః.

௪-வது அத்யாயம் முற்றிற்று.

---

## ௫-வது அத்யாயம்.

---

இனி பகவதாராதநமும் ஆச்ரமதர்மமும் சொல்லுகிறது.

శ్రీపరాశర ఉవాచ.

నిత్య మభ్యర్చయే ద్విష్ణుం పురాణం పురుషోత్తమమ్।
అప్సు వ్యోమ్ని తథాఽర్చాయాం వహ్నౌ హృది తథాగురౌ॥
త్రికాల మర్చయే ద్దేవం ప్రీతిమా న్సువిశేషతః।

ஸ்ரீபராசர உவாச.

நித்யமப்யர்ச்சயேத் விஷ்ணும் புராணம்புருஷோத்தமம்|
அப்ஸுவ்யோம்நிததார்ச்சாயாம் வஹ்நௌஹ்ருதிததாகுரௌ||
த்ரிகாலமர்ச்சயேத்தேவம் ப்ரீதிமாந்ஸுவிசேஷத:|

தா-ம். ஸர்வவ்யாபியாய் ஸர்வோத்தமனாய் அநாதியாயுள்ள ஸ்ரீமந்நாராயணனை, ஜலத்திலும், ஆகாசத்திலும், அர்ச்சாவிக்ரஹத்திலும், அக்நியிலும், ஹ்ருதயத்திலும், ஆசார்யனிடத்திலும் நாள்தோறும் மூன்று காலங்களிலும் மிகுந்த பக்தியுடையவனாய் அர்ச்சிக்கக்கடவன். ௧.

స్నానకాలే హరిం సమ్య గ్భావయే జ్జలశాయినమ్॥ ௨.
సన్ధ్యాకాలే తథా వ్యోమ్ని పూజయే ద్రవిమణ్డలే।

ప్రతిమాస్వర్చయే ద్దేవ మగ్నౌ హోమై స్తథాప్రభుమ్॥ 3.
ప్రాణాగ్నౌ హోత్రసమయే।

ஸ்நாநகாலேஹரிமஸம்யக் பூஜயேஜ்ஜலசாயிநம்॥ உ.
ஸந்த்யாகாலேததாவ்யோம்நி பூஜயேத்ரவிமண்டலே।

ப்ரதிமாஸ்வர்ச்சயேத்தேவ மக்னௌஹோமைஸ்ததாப்ரபும்॥ ௩.
ப்ராணாக்நிஹோத்ரஸமயே।

தா-ம். அதில் ஸ்நாநகாலத்தில் ஜலத்தில் பள்ளிகொண்ட விஷ்ணுவை ஜலத்தில் ஆராதிக்கவேணும். ஸந்த்யாவந்தநம் செய்யும்போது ஆகாசத்தில் ஸூர்யமண்டலத்திலும், கீழ்ச்சொன்ன யாகாநுஷ்டாந காலத்தில் அர்ச்சாவிக்ரஹத்திலும், ஹோமகாலத்தில் அக்கியிலும், போஜநகாலத்தில் ப்ராணாஹுதி பண்ணும்போது ஹ்ருதயத்திலும் ஸர்வஸ்வாமியான அவனை ஆராதிக்கவேணும்.

జపే దష్టాక్షరం బుధః।
అష్టోత్తరశతంవాపి హ్యష్టావింశతిమేవవా॥ ४.

యథాశక్తి జపే న్మన్త్రం నిత్య మేవ మతన్ద్రితః।
తదర్థంచి న్తయే న్నిత్యం యావద్దేహనిపాతనమ్। ५.

ஜபேதஷ்டாக்ஷரம்புதः।
அஷ்டோத்தரஶதம் வாபி ஹ்யஷ்டாவிம்ஶதிமேவவா॥ ௪.

யதாஶக்திஜபேந்மந்த்ரம் நித்யமேவமதந்த்ரிதঃ।
தததர்த்தம்சிந்தயேந்நித்யம் யாவத்தேஹநிபாதநம்॥ ௫.

தா-ம். சரீரம் நசிக்குமளவும் தினந்தோறும் திருவஷ்டாக்ஷரத்தை நூற்றெட்டு தரமாவது இருபத்தெட்டு தரமாவது தன் சக்திக்கு அநுகுணமாக ஜபித்து அதினர்த்தத்தையும் அநுஸந்தாநம் பண்ணக்கடவன். ௬௭.

అలాభేప్రతిమాయాస్తు శుచౌ దేశే మనోహరే।
స్థణ్డిలే పురుషం ధ్యాత్వా పూజయే న్మనసైవతు।

அலாபேப்ரதிமாயாஸ்து ஶுசௌதேஶேமநோஹரே।
ஸ்தண்டிலேபுருஷம்த்யாத்வா பூஜயேந்மநஸைவது। ௬.

தா-ம். அர்ச்சாவிக்ரஹம் அகப்படாவிடில் பரிசுத்தமாய் அழகாய் புல்லு முதலானவைகளில்லாத தேசத்திலே சித்ரத்தை யெழுதி அதில் பகவானை மனதிஞல் த்யாநிக்கவேண்டியது. ௬௨.

జపే ద్ద్వయ మ్మన్త్రరత్నం ధ్యాయ న్సర్వగతం హరిమ్। •

ஜபேத்த்வயம்மந்த்ராத்நம் த்யாயந்ஸர்வகதம்ஹரிம்|

தா-ம். மந்த்ரங்களில் உத்க்ருஷ்டமான த்வயமந்த்ரத்தை ஸர்வவ்யாபியான பரமாத்மாவை ஸ்மரித்துக்கொண்டு ஜபிக்கவேணும்.

పాషణ్డినః పాశుపతా న్వికర్మస్థా ననీశ్వరాన్॥ ౭.

నసంభాషేత సతతం వాఙ్మాత్రేణాపినార్చయేత్।

பாஷண்டிநஃபாசுபதாந் விகர்மஸ்தாநநீஶ்வராந்|| ௭.

நஸம்பாஷேதஸததம் வாங்மாத்ரேணாபிநார்ச்சயேத்|

தா-ம். பகவத் பாகவதர்களோடு த்வேஷம் பண்ணித் திரிகிற பாஷண்டிகளோடும், பாசுபதம் என்கிற சைவமதத்தை யவலம்பித்தவர்களோடும், கர்மப்ரஷ்டர்களோடும் ஈஶ்வரனெருவனில்லையென்று சொல்லுகிற நாஸ்திகர்களோடும் எப்போதும் ஸம்பாஷிக்கவுங் கூடாது; அவர்களை உத்கர்ஷித்துச் சொல்லவுங் கூடாது. ௭௨.

ఉపవీతం శిఖాబన్ధ మూర్ధ్వపుణ్డ్రం తథైవచ॥ ౮.

పద్మాక్షమాలాం కౌశేయం సతతం ధారయే ద్ద్విజః।

உபவீதம்சிகாபந்த மூர்த்வபுண்ட்ரம்ததைவச|| ௮.

பத்மாக்ஷமாலாம்கௌசேயம் ஸததம்தாரயேத்த்விஜஃ|

தா-ம். ப்ராஹ்மணன் பூணூலும் குடுமியும் ஊர்த்வபுண்ட்ரமும் தாமரைமணி மாலையும் வெண்வஸ்திரமும் எப்போதுந்தரிக்கவேணும். ௮௨.

ఏకోపవీతం ధార్యం స్యా ద్యతీనాం బ్రహ్మచారిణామ్॥ ౯.

గృహస్థానాం వనస్థానా ముపవీతద్వయం విదుః।

ஏகோபவீதம்தார்யம்ஸ்யாத் யதீநாம்ப்ரஹ்மசாரிணாம்|| ௯.

க்ருஹஸ்தாநாம்வநஸ்தாநா முபவீதத்வயம்விதுஃ|

தா-ம். அதில் ப்ரஹ்மசாரிக்கும் ஸந்யாஸிக்கும் ஒரு பூணூலும், க்ருஹஸ்தனுக்கும் வாநப்ரஸ்தனுக்கும் இரண்டு பூணூலும் தார்யங்களென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ௯௨.

మౌఞ్జీ మజినదణ్డౌచ బ్రహ్మచారీధరేత్సదా। ౧౦.

மௌஞ்சீமஜிநதண்டௌச ப்ரஹ்மசாரீதரேத்ஸதா|| க௦.

தா-ம். முஞ்சமென்னும் புல்லினால் பின்னப்பட்ட மௌஞ்சியென்பதையும் க்ருஷ்ணாஜிநத்தையும் பாலாசம் முதலான தண்டத்தையும் ப்ராஹ்மசாரி தரிக்கக்கடவன். க௦.

కటిసూత్రఞ్చ కౌపీనం శుక్లవస్త్రద్వయం శుభమ్।
వలయాద్యఙ్గులీయాది గృహస్థానాంవిధీయతే॥ ౧౧.

கடிஸூத்ரஞ்சகௌபீநம் சுக்லவஸ்த்ரத்வயம்சுபம்|
வலயாத்யங்குலீயாதி க்ருஹஸ்தாநாம்விதீயதே|| கக.

தா-ம். அரைநாண், கௌபீநம், மங்களகரமான இரண்டு வெண் வஸ்த்ரம், கைவளை, மோதிரம முதலான ஆபரணங்கள், இவைகளெப் போதும் க்ருஹஸ்தர்களுக்கு தார்யங்களாக விதிக்கப்பட்டன. கக.

శ్మశ్రులోమ జటాచైవ తథా వల్కలధారణమ్।
చీరాజినతపోఽరణ్యం వనస్థస్య విధీయతే॥ ౧౨.

ஶ்மஶ்ருலோமஜடாசைவ ததாவல்கலதாரணம்|
சீராஜிநதபோரண்யம் வநஸ்தஸ்யவிதீயதே|| க௨.

தா-ம். மீசை மயிர் ஜடை இவைகளை க்ஷௌரஞ் செய்யாமல் வளர்த்தல், அரையில் மரவுரியைத் தரித்தல், மரவுரியாவது க்ருஷ்ணாஜிநமாவது உத்தரீயமாகத் தரித்தல், தபஸ்ஸு பண்ணுதல், காட்டில் வஸித்தல் இவைகள் வாநப்ரஸ்தனுக்கு விதிக்கப்பட்டன. க௨.

త్రిదణ్డ ముపవీతఞ్చ శిక్యంకాషాయమమ్బరమ్।
కమణ్డలు భైక్షచర్యా యతీనాన్తువిధీయతే॥ ౧౩.

த்ரிதண்டமுபவீதஞ்ச சிக்யங்காஷாயமம்பரம்|
கமண்டலுர்பைக்ஷ சர்யா யதீநாந்துவிதீயதே|| க௩.

தா-ம். த்ரிதண்டம், யஜ்ஞோபவீதம், பிக்ஷையை வாங்குகைக்காக முடியிட்டு வைத்திருக்கும் சிக்யம், காஷாயவஸ்த்ரம், கமண்டலு இவைகளைத் தரிததல், பிக்ஷாடநஞ் செய்தல் இவை யதிகளுக்கு விதிக்கப்பட்டன. க௩.

సాధారణస్తు సర్వేషాంధర్మస్తు మునిభి స్స్మృతమ్।
అభక్ష్యభక్షణం హింసా పరస్త్రీష్వభిలాషితా॥ ౧౪.
పరేషాందోషకథన మనర్థాయప్రకల్పతే।

ஸாதாரணஸ்து ஸர்வேஷாம் தர்மஸ்து முநிபிஸ்ஸ்ம்ருதம்|
அபக்ஷ்யபக்ஷணம்ஹிம்ஸா பரஸ்த்ரீஷ்வபிலாஷிதா|| ௧௪.
பரேஷாம்தோஷகதந மநர்த்தாயப்ரகல்பதே|

தா-ம். இந்த நாலு ஆஶ்ரமத்திலுள்ளவர்களுக்கும் விஹித்தமான கர்மங்களைச் செய்யாதொழிவது பொதுவான தர்மமென்று ருஷிகள் சொன்னார்கள். விஹித்தங்களாவது வென்றால்-புஜிக்கத்தகாததென்று சாஸ்த்ரத்திலும் சிஷ்டாசாரத்திலும் கழித்து விட்டதை புஜித்தல், ஒரு ஜீவனைக் கொல்லுதல், பரஸ்த்ரீயை இச்சித்தல், பிறர் தோஷத்தைச் சொல்லுதல், மற்றும் பிறர் வருத்தமுறும் வ்யாபாரத்தைச் செய்தல் இவைகள். ௧௪ உ.

పూర్వాశ్రమా త్తురీయస్తు నారీసఙ్గం విసర్జయేత్॥ ౧౫.
గృహస్థశ్చ వనస్థశ్చ స్వదారనిరతావుభౌ।

பூர்வாஶ்ரமாத்துரீயஸ்து நாரீஸங்கம்விஸர்ஜயேத்|| ௧௫.
க்ருஹஸ்தஶ்சவநஸ்தஶ்ச ஸ்வதாரநிரதாவுபௌ|

தா-ம். க்ருஹஸ்தாஶ்ரமத்தையும் வாநப்ரஸ்தாஶ்ரமத்தையும் விட்டு ஸந்யாஸியாகும்போது தன் ஸ்த்ரீயை விட்டுவிட வேண்டியது. க்ருஹஸ்தனும் வாநப்ரஸ்தனும் தங்கள் ஸ்த்ரீகளிடத்திலேயே போகேச்சையுடையவர்களாக ஆகக்கடவர்கள். ௧௫ உ.

శ్రుతిస్మృత్యుదితం సమ్య జ్నిత్య మాచార మాచరేత్॥ ౧౬.

ஶ்ருதிஸ்ம்ருத்யுதிதம் ஸம்யங் நித்யமாசாரமாசரேத்|| ௧௬.

தா-ம். எந்த வர்ணத்தாக்கு எந்த ஆஶ்ரமத்துக்கு எந்த ஆசாரம் வேதத்திலும் தர்மசாஸ்த்ரத்திலுஞ் சொல்லியிருக்கிறதோ? அந்த வர்ணத்தில் அந்த ஆஶ்ரமத்திலுள்ளவன் அந்த ஆசாரத்தைச் செய்யக்கடவன். ௧௬ உ.

பாஷண்டிலக்ஷணம்.

శ్రుతిస్మృత్యుదితం నిత్యం యస్తు నాచరతి ద్విజః।
స పాషణ్డీతి విజ్ఞేయ స్సర్వకర్మసుగర్హితః॥ ౧౭.

ஶ்ருதிஸ்ம்ருத்யுதிதம் நித்யம்யஸ்த்வநாசரதித்விஜ:|
ஸபாஷண்டிதிவிஜ்ஞேயஸ் ஸர்வகர்மஸு கர்ஹித:|| ௧௭.

தா-ம். வேதங்களிலும் தர்மசாஸ்த்ரங்களிலும் எதை விசேஷ தர்மமென்றும் நித்யமாக அநுஷ்டிக்கத் தக்கதென்றும் சொல்லியிருக்கிறதோ? அதை எவனொருவன் அநுஷ்டியாமலிருக்கிறானோ? அந்த ப்ராஹ்மணனைப் பாஷண்டியென்று அறியவும். அவன் ஒரு கர்மங்களிலு முபயோகிக்கமாட்டான். ௧௭.

ப்ரஹ்மசாரி செய்யவேண்டும் நித்யக்ருத்யம்.

సాయం ప్రాత స్సమిద్ధోమ స్స్వాధ్యాయాధ్యయనం జపః।
గృహస్థానాంగృహే భైక్షవిధిస్తుబ్రహ్మచారిణామ్॥ ౧౮.

ஸாயம்ப்ராதஸ்ஸமித்ஹோமஸ் ஸ்வாத்யாயாத்யயநம்ஜப:|
க்ருஹஸ்தாநாம்க்ருஹேபைக்ஷவிதிஸ்துப்ரஹ்மசாரிணாம்||௧௮.

தா-ம். உதயகாலத்திலும் ஸாயங்காலத்திலும் பலாசம்ஸமித்தினால் ஹோமம், அதாவது - ஸமிதாதாநம், வேதாத்யயநம், காயத்ரீ திருவஷ்டாக்ஷரம் முதலிய மஹாமந்த்ரங்களின் ஜபம், க்ருஹஸ்தர்களுடைய க்ருஹத்தில் பிக்ஷைகொள்ளுதல்,—அதாவது சாப்பிடுகைக்காக நாலு ஐந்து க்ருஹஸ்தர்களிடம் யாசித்து அந்நத்தை ஸம்பாதித்தல், இவைகளை ப்ரஹ்மசாரி நித்யமாகச் செய்யவேண்டும்.

க்ருஹஸ்தன் செய்யவேண்டும் நித்யக்ருத்யம்.

సాయంప్రాతశ్చ జుహుయాదగ్నిహోత్రం సదా గృహీ।
తథైవ పఞ్చయజ్ఞాది యజ్ఞహోమం సమాచరేత్॥ ౧౯

ஸாயம்ப்ராதஶ்சஜுஹுயா தக்நிஹோத்ரம்ஸதாக்ருஹீ|
ததைவபஞ்சயஜ்ஞாதி யஜ்ஞஹோமமஸமாசரேத்|| ௧௯.

தா-ம். க்ருஹஸ்தன் தினந்தோறும் உதயகாலம் சாயங்காலங்களில் அக்நிஹோத்ரமென்கிற ஹோமத்தைச் செய்யக்கடவன். ப்ரதிதினம் ப்ரஹ்மயஜ்ஞம், தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூதயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம் ஆகிற பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்யக்கடவன். ப்ரஹ்மயஜ்ஞமாவது - வேதாத்யயநம்; தேவயஜ்ஞமாவது - ஹோமம் (ஔபாஸநம்); பித்ருயஜ்ஞமாவது - பித்ருதர்ப்பணம்; பூதயஜ்ஞமாவது - காகம் முதலிய பூதங்களுக்கு அந்நத்தினால் பலியிடுதல்; மநுஷ்யயஜ்ஞமாவது - அதிதியைப் பூஜித்தல். அதிதியென்பவன் - தான் போஜநம் செய்யும் ஸமயத்தில் வந்த வழிப்போக்கன்; அவன் ஜாதி

யில் தனக்குக் குறைந்திருந்தால் அதிதியாகமாட்டான். அப்படியே தர்சபௌர்ண மாஸங்கள் முதலாகிய யஜ்ஞங்களையும் செய்யக் கடவன். ௧௯.

ஸந்யாஸி செய்யவேண்டும் நித்யக்ருத்யம்.

స్నానం త్రిసంధ్యమపహి యతీనాన్తు విధీయతే।
జపమౌనతపోయోగ బ్రహ్మచర్యదమాస్తథా॥ ౨౦.

కామక్రోధౌ తథాలోభ మోహమానమదాంస్త్యజేత్।
మత్సరద్వేషరూక్షోక్తి నిద్రాలస్యాదివర్జయేత్॥ ౨౧.

ஸ்நாநம்த்ரிஸந்த்யமபிஹி யதீநாந்துவிதீயதே|
ஜபமௌநதபோயோக ப்ரஹ்மசர்யதமாஸ்ததா|| ௨0.
காமக்ரோதௌததாலோப மோஹமாநமதாம்ஸ்த்யஜேத்|
மத்ஸரத்வேஷரூக்ஷோக்தி நித்ராலஸ்யாதிவர்ஜயேத்|| ௨௧.

தா-ம். ஸந்யாஸி உதயம், மத்யாஹ்நம், ஸாயங்காலம் ஆகிய இம் மூன்று காலங்களிலும் ஸ்நாநம் செய்யவேணும். திருவஷ்டாக்ஷரம் முதலிய மஹாமந்த்ரங்களை ஜபிக்கவேணும். வ்யர்த்தமாய்ப் பேசக் கூடாது. சரீரமிளைக்கும்படி உபவாஸம் சாந்த்ராயணம் முதலானவைகளைச் செய்யவேண்டும். பரமாத்மாவினிடத்தில் பக்திசெய்யவேணும். ஸ்த்ரீயோடு ஸம்பாஷணம் முதலியவைகளும் செய்யக் கூடாது. இந்த்ரியங்களை அதன் வழிகளில் யதேச்சையாய்ப் போகவொட்டாமல் அடக்கவேணும். சநத்திலாவது பந்துக்களிடத்திலாவது ப்ரீதிவைக்கக் கூடாது. ஒருவரைக் கோபிக்கக் கூடாது. பிறர் வஸ்துவை ஆசைபடக்கூடாது. நச்வரமான இந்த லோகத்தை சாச்வதமென்றெண்ணி மோஹிக்கக்கூடாது. நான் பெரியனென்கிற கர்வம்கூடாது. ஒருவன் பரிஹாஸம் செய்தால் அதிநல் வெட்கப்படக்கூடாது. ஒருவன் மேன்மையைக்கண்டு பொறாமை யடையக்கூடாது. ஒருவனோடு த்வேஷம் செய்யக்கூடாது. ஒருவனை நோவ வார்த்தை சொல்லக்கூடாது. தூக்கம், சோம்பல் இவை முதலியவைகளை விட்டுவிடவேணும். ௨௧.

ఇతి శ్రీపరాశరస్మృతావుత్తరఖణ్డేవిశిష్టపరమధర్మశాస్త్రే
భగవదారాధనాశ్రమధర్మవర్ణనన్నామపఞ్చమోఽధ్యాయః.

௫-வது அத்யாயம் முற்றிற்று.

## ௬-வது அத்யாயம்.

శ్రీపరాశరఉవాచ.

విస్తరేణ బ్రవీమ్యత్ర విష్ణో రాశ్రయణక్రియామ్।

ஸ்ரீபராசரஉவாச.

விஸ்தரேணப்ரவீம்யத்ர விஷ்ணோராஶ்ரயணக்ரியாம்|

தா-ம்.—ஸ்ரீபராசரமஹர்ஷி சொல்லுகிறார்.—ருஷிகளே! முன் சுருக்கமாகச்சொன்ன பகவதாஶ்ரயணத்தை இந்த அத்யாயத்தில் விஸ்தாரமாகச்சொல்லுகிறேன் கேளுங்கள். ௧.

ఉత్థాయ పశ్చిమే యామ ఆచమ్య ప్రయతాత్మవాన్॥ ౧

నివేశితే శుచౌ దేశే సమాసీన స్సుఖాసనే।

ఆత్మానం స్వశరీరఞ్చ పరేశమనుచిన్తయేత్॥ ౨.

உத்தாயபஶ்சிமேயாம ஆசம்யப்ரயதாத்மவாந்|| ௧.

நிவேசிதேசுசௌதேசே ஸமாஸீநஸ்ஸுகாஸநே|
ஆத்மாநம்ஸ்வசரீரஞ்ச பரேசமநுசிந்தயேத்|| ௨.

தா-ம்.—இரவில் நான்காவது யாமத்திலெழுந்திருந்து கைகால்களைச் சுத்திசெய்துகொண்டு ஆசமநம்செய்து எறும்புமுதலிய புழுக்களில்லாமல் பரிசுத்தமாயிருக்கிற இடத்தில் ம்ருதுவாயிருக்கிற ஆஸநத்தையிட்டு அதிலுட்கார்ந்து மநஸ்ஸைப் பெண்டாட்டி பிள்ளை முதலிய விஷயங்களிற் செல்லாமற்படிசெய்து பின்பு தன்னையும் தன்னுடைய சரீரத்தையும் தனக்கு ஸ்வாமியான பரமாத்மாவையும் த்யாநம் செய்யக்கடவன். ௨.

சரீரத்தை த்யாநிக்கும் விதம் சொல்லுகிறது.

శుక్రశోణితసంభూతం శరీరం పాఞ్చభౌతికమ్।

శబ్దాదివిషయోపేతై ర్యుత మేకాదశేన్ద్రియైః॥ ౩.

అవ్యక్తబుద్ధ్యహఙ్కారదశకార్యగుణైర్యుతమ్।

వసామూత్రపురీషాస్థిచర్మమాంససిరాయుతమ్॥ ౪

ద్విషద్భిః కామకారాద్యై రనిశం పీడితాన్తరమ్।

తాపత్రయమహాజ్వాలవహ్నిభిః పరివేష్టితమ్॥ ౫.

ఈషణాత్రయతృష్ణాభి ర్నిబద్ధం మలపూరితమ్।
ద్విసప్తతిసహస్రాభి ర్నాడీభిః పరివేష్టితమ్॥

சுக்ரசோணிதஸம்பூதம் சரீரம்பாஞ்சபௌதிகம்|
சப்தாதிவிஷயோபேதைர் யுதமேகாதசேந்த்ரியை:॥ ௩.

அவ்யக்தபுத்ய்யஹங்கார தத்த்வஸார்வகுணைர்யுதம்|
வஸாமூத்ரபுரீஷாஸ்ருக் சர்மமாம்ஸஸிராயுதம்|| ௪.

த்விஷத்பிஃகாமகாராத்யை ரபிசம்பீடிதாந்தரம்|
தாபத்ரயமஹாஜ்வாலவஹ்நிபி: பரிவேஷ்டிதம்|| ௫.

ஈஷணாத்ரயத்ருஷ்ணாபிர் நிபத்தம்மலபூரிதம்|
த்விஸப்ததிஸஹஸ்ராபிர் நாடீபிஃபரிவேஷ்டிதம்|| ௬.

தா-ம்.—இந்தச் சரீரமானது சுக்ரமென்கிற புருஷனுடையவீர்யத்தினாலும், சோணிதமென்கிற ஸ்த்ரீயினுடைய ரஜஸ்ஸினாலுமுண்டானது. மண், ஜலம், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்கள் சேர்ந்து இவ்விதமாய் விகாரத்தை யடைந்திருக்கின்றன. இது த்வக், சக்ஷுஸ், ஶ்ரோத்ரம், ஜிஹ்வை, க்ராணம், என்கிற ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களும், வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம், என்கிற ஐந்து கர்மேந்த்ரியங்களும், மநஸ்ஸு என்கிற ஆந்தரிந்த்ரியமும் ஆகிய பதினொரு இந்த்ரியங்களோடுகூடியிருக்கிறது. த்வக் என்பது—வெம்மை குளிர்ச்சி முதலிய ஸ்பர்சங்களையறிகைக்கு ஹேதுவாய் சரீரமெங்கும் வ்யாபித்திருக்கும். சக்ஷுஸ் என்பது—வெண்மை, நீலம், முதலிய ரூபங்களை யறிகைக்கு ஸாதகமாய்க் கண்ணில் கருவிழியின் மத்தியிலிருக்கும், ஶ்ரோத்ரம் என்பது—சப்தத்தைக் கேட்கஸாதகமாய் செவிக்குள்ளிருக்கும். ஜிஹ்வை என்பது—தித்திப்பு, கைப்பு முதலிய ரஸங்களை யறிகைக்குக் காரணமாய் நாவின் நுனியிலிருக்கும். க்ராணம் என்பது—பரிமளம், துர்க்கந்தம் முதலியவைகளை யறிகைக்குக் காரணமாய் மூக்கின் நுனியிலிருக்கும். இவ்வையைந்தும் அறிவுக்கு ஸாதகமாகையால் ஜ்ஞானேந்த்ரியங்களென்று சொல்லப்படுகின்றன. வாக் என்பது—வார்த்தை சொல்லுகைக்குக் காரணமாய் கடைவாய்முதலிய இடங்களிலிருக்கும் பாணி என்பது—ஒன்றை எடுத்தல், பிடித்தல்முதலியவை செய்கைக்கு ஹேதுவாய் இரண்டுகைகளின் தலங்களிலிருக்கும். பாதம் என்பது—நடக்கைக்கு ஹேதுவாய் இரண்டு பாதங்களிலிருக்கும். பாயு என்பது—மலத்

தை விடுகைக்கு ஹேதுவாய்க் குதத்திலிருக்கும். உபஸ்தமென்பது-ஸ்த்ரீபுருஷர்கள் ஒருவர்க்கொருவர் புணர்ந்து ஸுகத்தைத அநுபவிக்கைக்கு ஸாதகமாய் ஆண்பெண்குறிகளிலிருக்கும். இவையைந்தும் செயலுக்குஸாதகமாகையால் கர்மேந்த்ரியங்களென்றுசொல்லப்படுகின்றன. மநஸ்ஸு என்பது—எல்லாவறிவுக்கும் ஸாதகமாய்சரீரத்தினுள்ளே யிருக்கும். ஆகையால் இதற்கு ஆந்தரிந்த்ரியமென்று பெயர். இப்படி பதினொன்றும் தந்தம் வ்யாபாரத்தோடு கூடியதாய்இந்தச் சரீரத்தில் வஸிக்கின்றன. மூலப்ரக்ருதி, புத்தி என்கிற மஹத்தத்வம், அஹங்காரம், அஹங்காரதத்வத்தில் நின்று முண்டான (சப்த தந்மாத்ரை, ஸ்பர்சதந்மாத்ரை, ரூபதந்மாத்ரை, ரஸதந்மாத்ரை, கந்ததந்மாத்ரை ஆகிய ஐந்து தந்மாத்ரைகள், ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸு, வாயு, ஆகாசம், ஆகிய ஐந்து பூதங்கள், இந்த) பத்து தத்வங்கள், ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம், ஆகிய மூன்று குணங்கள் இவைகளோடுகூடியதாயிருக்குமிந்தச் சரீரம், சவுர்நீர், மூத்ரம், விஷ்டை, எலும்பு, தோல், மாம்ஸம், நரம்பு, இவைகளோடும் கூடியிருக்கிறது. தனக்கு சத்ருக்களாகிற காமம் (ஒரு வஸ்துவில் ஆசை), க்ரோதம் (ஆசைப்பட்ட வஸ்துவை அகப்படாமல் செய்தவர்களிடத்திலுண்டான கோபம்), மோஹம் (செய்யவேண்டியவை செய்யத்தகாதவைகளை உள்ளபடி யறியாமை), லோபம் (அயலாருடைய பொருளை யாசைப்படல்), மதம் (தானே பெரியனென்கிற கர்வம்), மாத்ஸர்யம் (அயலார் மேன்மையைக்கண்டு பொறாமை), இவைகளிறுலெப்போதும் நொந்திருக்கிறது. ஆத்யாத்மிகம் (சரீரத்தில் வாதம் பித்தம் ச்லேஷ்மம் இந்த தாதுக்களினுடைய உயர்வு தாழ்வுகளிறுலுண்டான ஜ்வரம் முதலிய உபத்ரவம்), ஆதிபௌதிகம் (பாம்பு தேள் முதலானவைகளிறுலுண்டான உபத்ரவம்), ஆதிதைவிகம் (மின்னல் இடி முதலானவைகளிறுலுண்டான உபத்ரவம்) என்கிற மூன்றுவிதமான தாபங்களாகிற பெரிய எரிச்சலோடு கூடிய மூன்றக்கிகளிறுல் நாலுபக்கங்களிலும் சூழப்பட்டிருக்கிறது. புத்ரேஷணை (பிள்ளையினிடத்திலாசை), வித்தேஷணை (தநத்திலாசை), லோகேஷணை (ஸ்வர்க்கம முதலான லோகங்களிலாசை) என்கிற மூன்று ஈஷணைகளிறுல் நெருக்குண்டிருக்கிறது. அழுக்கிறுல் நிறைந்திருக்கிறது. எழுபத்தீராயிரம் நரம்புகளிறுல் சுற்றப்பட்டிருக்கிறது. என்று இவ்விதமாய் சரீரத்தின் நிஹீநதையையும் நச்வரதையையும், இதன் ஸம்பந்தம ஆத்மாவைய பிடித்து விடுமென்பதையும் ஒன்றாய் அநுஸந்திக்கக்கடவன். சா

ஆத்மாவை த்யாநிக்கும் விதம் சொல்லுகிறது.

హృత్పుండరీకమధ్యేఽత్ర వసామి ప్రభయా జ్వలన్।
దేహేన్ద్రియమనఃప్రాణధీభ్యోఽన్యోఽనన్యసాధనః॥ ౭.

పఞ్చవింశాత్మకో నిత్యో మకారార్థస్సమాధిమాన్।
భగవచ్ఛేషభూతోఽహం మనన్యార్హోఽచితః పరః॥ ౮.

నిర్వికారో హ్యణుర్నిత్యః ప్రకృతే రవ్యయః పరః।
అజడోఽవ్యక్తరూపశ్చ జ్ఞానానన్దస్వరూపభాక్॥ ౯.

ఏకరూపో వ్యాప్తిశీలః క్షేత్రీ క్షేత్రజ్ఞ ఏవ చ।
జ్ఞాతా కర్తా చ భోక్తా చ అహంప్రత్యయగోచరః॥ ౧౦.

అదాహ్యోఽక్లేద్యోఽచ్ఛేద్యో హ్యశోష్యోఽక్షర ఏవ చ।
ఏవం దేహేన్ద్రియాద్యన్య మాత్మానం సతతం స్మరేత్॥ ౧౧.

ஹ்ருத்புண்டரீகமத்யேத்ரவஸாமிப்ரபயாஜ்வலந்|
தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோந்யோநந்யஸாதந:|| ௭.

பஞ்சவிம்சாத்மகோநித்யோ மகாரார்த்தஸ்ஸமாதிமாந்|
பகவச்சேஷபூதோஹ மநந்யார்ஹோசித:பர:|| ௮.

நிர்விகாரோ ஹ்யணுர்நித்ய: ப்ரக்ருதேரவ்யய:பர:|
அஜடோவ்யக்தரூபஸ்ச ஜ்ஞாநாநந்தஸ்வரூபபாக்|| ௯.

ஏகரூபோவ்யாப்திசீல: க்ஷேத்ரீக்ஷேத்ரஜ்ஞஏவச|
ஜ்ஞாதாகர்த்தாசபோக்தாச அஹம்ப்ரத்யயகோசர: ௧௦.

அதாஹ்யோக்லேத்யகோச்சேத்யோஹ்யசோஷ்யோக்ஷரஏவச|
ஏவம்தேஹேந்த்ரியாத்யந்யமாத்மாநம்ஸததம் ஸ்மரேத்|| ௧௧.

தா-ம்.—இந்த ஹேயமான சரீரத்தில் மார்பின்நடுவில் தாமரை மொக்குபோலிருக்கிற மாம்ஸரூபமான அவயவத்தின் நடுவில் நான் வாஸம் பண்ணுகிறேன். ஹேயமாய் பருமனாய்க்காண்கிற இந்தச்சரீரம், இதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான இந்த்ரியங்கள், மநஸ்ஸு, இவைகளொழிந்தகாலத்திலும் காண்கிறப்ராணன், புத்தி, இவைகளைக்காட்டிலும் வேறாய்த் தன்னுடைய ப்ரகாசத்திற்கு வேறொரு

ஸாதகம் வேண்டாமல் தீபம்போல் தனக்குத்தானே ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறேன்; நான் ப்ரக்ருதி, மஹத், அஹங்காரம், ஐந்து தந்மாத்ரைகள், ஐந்துபூதங்கள், பதினொரு இந்த்ரியங்கள் ஆகிய இருபத்துநாலு தத்வங்கள் கழிந்து இருபத்தைந்தாம் தத்வமாய், க-முதல் இருபத்தைந்தாவது அக்ஷரமான ம-என்கிற அக்ஷரத்தினால் சொல்லப்பட்டவனாய், (ஜ்ஞானஸ்வரூபனாய்), உத்பத்தி விநாசமில்லாதவனாயிருக்கிறேன். பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கைக்கு யோக்யமானபக்தியோகத்தை யநுஷ்டிக்கைக்கு யோக்யதையுடையவன்; பகவானான ஸ்ரிய:பதிக்கே அடியன், வேறொருவனுக்கு அடிமைப்படயோக்யனல்லன்; ஜ்ஞானமில்லாத அசித்தைக்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிறவன், அதெப்படியெனில்; அசித்து, சிறிதாகவும் பெரிதாகவும் பரிணமத்தை யடையும்; பெரிதாகக்காணும்; பிறக்கும்; அழியும்; மூலப்ரக்ருதியைக்காட்டிலும் கீழ்ப்பட்டிருக்கும்; ஜ்ஞானமில்லாமலிருக்கும்; எல்லாராலும் காணக்கூடியதாய் ஜடமாயிருக்கும், பலவிதமாயிருக்கும்; ஒன்றால்வ்யாபிக்கப்பட்டிருக்கும். ஆத்மாவானநான் எப்போதும் ஏகரூபமாய், அணுவாய், பிறப்பிறப்பில்லாதவனாய், மூலப்ரக்ருதிக்கும்மேலாய், ஜ்ஞானமுடையவனாய், எல்லாருக்கும் ஸ்பஷ்டமாகக்காணக்கூடாதவனாய்; ஜ்ஞானாநந்தங்களையே ஸ்வரூபமாகவுடையவனாயிருக்கிறேன். பல்விதமின்றிக்கே மற்ற ஆத்மாக்கள் போல விருக்கின்றேன்; எல்லாவஸ்துக்களிலும் உள்ளே ப்ரவேசிக்க சக்தியுடையனாயிருக்கிறேன். நான் சரீரத்தையுடையவன். சரீரத்தை இது வென்றும் எனது என்றும் அறிகிறேன். அடையவேண்டும் பலத்தையும் அதற்குபாயத்தையுமறிந்து அவ்வுபாயத்தைச் செய்து அந்த பலத்தை யநுபவிக்கிறேன். அறம் என்று நானே தோற்றுகிறேன். அழிவில்லாமைக்குக் காரணமென்னென்னில்; ஜலம், தீ, வாயு, ஆயுதம், இவைகளினால் நனைக்கவும் எரிக்கவும் வறட்டவும் வெட்டவும் செய்யத்தகாதவன். இவைகள் உள்ளே நுழைந்து தந்தம் கார்யங்களைச் செய்யவேணும்; ஆத்மா மிகவும் ஸூக்ஷ்மமாகையால் இதற்குள்ளே ப்ரவேசிக்க அவைகளுக்கு ஸாமர்த்யமில்லை. ஆகையாலழிவில்லை. என்று இவ்விதமாக தேக முதலியவைகளைக்காட்டிலும் வேறுபட்டவனாக ஆத்மாவை எப்போதும் த்யானம் செய்யவேண்டும்.

ఇత్యాత్మానం వృథం జ్ఞాత్వా స్వాత్మన్యేవ మనుచిన్తయేత్।
పరే వ్యోమ్ని పరేశానం తథా ధ్యాయేదతన్ద్రితః॥  ౧౨.

இத்யாத்மாநம்க்ருடம் ஜ்ஞாத்வா ஸ்வாத்மேசமநுசிந்தயேத்|
பரேவ்யோம்நிபரேசாநம்ததாவ்யூஹாதிபேதத:|| ௧௨.

தா-ம்.—இப்படி ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நன்றாயறிந்து பின்பு தனக்கு ஸ்வாமியாய் ஸ்ரீவைகுண்டத்திலும் திருப்பாற்கடல் முதலிய வ்யூஹங்களிலும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நியாமகனாயெழுந்தருளியிருக்கிற பரமாத்மாவை த்யானம் செய்யக்கடவன். ௧௨.

லீலா விபூதியை த்யாநிக்கும் விதம்.

అణ్డ మణ్డగతాన్లోకాన్ తద న్తర్గతవిగ్రహాన్।
తదంశాంశసమూహం తద న్తర్యామిత్వ మాత్మనః॥ ౧౩.

దశోత్తరా నావరణాన్ తద న్తస్థచరాచరాన్।
ప్రధానం పురుషంచైవ త్రిగుణం తత్ర సంభవమ్॥ ౧౪.

அண்டமண்டகதாங்லோகாந் ததந்தர்கதவிக்ரஹாந்|
ததம்சாம்சஸமூஹம்த தந்தர்யாமித்வமாத்மந:|| ௧௩.
தசோத்தராநாவரணாந் ததந்தஸ்தசராசராந்|
ப்ரதாநம்புருஷம்சைவ த்ரிகுணம்தத்ரஸம்பவம்|| ௧௪

தா-ம்.—பகவானுடைய விபூதியான ப்ரஹ்மாண்டத்தையும், அதிலுள்ள ஸத்யலோகம் முதலிய பதினாலு லோகங்களையும், ஆஸ்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக அங்கங்கே எழுந்தருளியிருக்கிற அநிருத்தன் முதலிய அவதாரங்களையும், அவருடைய அம்ச பூதர்களான த்ருவன், தந்வந்த்ரி, ப்ருது, வாஸுகி, முதலியவர்களையும், அவைகளில் பரமாத்மா அந்தர்யாமியாய் வ்யாபித்திருப்பதையும், ஒன்றைக்காட்டிலு மொன்று பத்துமடங்கு அதிகமாய் அண்டத்தைச் சூழ்ந்திருக்கிற ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸு, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹத், என்கிற ஏழு தத்வங்களையும், அண்டத்திலுள்ள பசு பக்ஷி முதலிய ஜங்கமங்களையும், மரம் கொடி புல் முதலிய ஸ்தாவரங்களையும், மூலப்ரக்ருதியையும், அதிலுள்ள ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களையும், அம்மூலப்ரக்ருதியி லழுந்தியிருக்கிற ஜீவன்களையும் த்யாநிக்கக்கடவன்.

நித்யவிபூதியை த்யாநிக்கும் விதம்.

తమస స్తత్పరం శుద్ధం హిరణ్మయ మనామయమ్ ।
పరమం వైష్ణవం లోకం నిత్యానన్దసుఖావహమ్॥ ౧౫.

தமஸஸ்தத்பரம்சுத்தம்ஹிரண்மயமநாமயம்|
பரமம்வைஷ்ணவம்லோகம்நித்யாநந்தஸுகாவஹம்|| கரு.

தா-ம்.—மூலப்ரக்ருதிக்குமேல் சுத்தஸத்வமயமாய் ஸுவர்ணம் போல் ப்ரகாசித்துக்கொண்டு மிகவழகியதாய் ப்ரளயம் முதலிய உபத்ரவங்களின்றி ஸர்வோத்க்ருஷ்டமாய் எப்போதும் ஆநந்தத்தைவிளைக்குமதான ஸ்ரீவைகுண்டமென்கிற ஸ்ரீவைஷ்ணவலோகத்தை த்யாநிக்கக்கடவன்.

తత్రసంవాహినీం దివ్యాం విరజాం వేదసంభవామ్।
తత్ర శుద్ధం పరం వ్యోమ హ్యనన్తమమృతాహ్వయమ్॥ ౧౬.
నిర్మలం నిత్య మజడ మనన్తసుఖదం సుఖమ్।
తత్రస్థితా న్యనేకాని స్థానాని సుఖవన్తిచ॥ ౧౭.
తత్ర జానపదగ్రామనగరాణిమహాన్త్యపి।
సర్వే హిరణ్మయా స్తత్ర సర్వే వేదమయాశ్శుభాః। ౧౮.
అప్రాకృతతయా నిత్యాః పునరావృత్తివర్జితాః।

தத்ரஸம்வாஹிநீம்திவ்யாம்விரஜாம்வேதஸம்பவாம்|
தத்ரசுத்தம்பரம்வ்யோமஹ்யநந்தமம்ருதாஹ்வயம்|| கசா.

நிர்மலம்நித்யமஜடமநந்தஸுகதம்ஸுகம்|
தத்ரஸ்திதாந்யநேகாநிஸ்தாநாநிஸுகவந்திச|| கஎ

தத்ரஜாநபதக்ராமநகராணிமஹாந்த்யபி|
ஸர்வேஹிரண்மயாஸ்தத்ரஸர்வேவேதமயாஶ்ஶுபா:|| கஅ.

அப்ராக்ருததயாநித்யா:புநராவ்ருத்திவர்ஜிதா:|

தா-ம்.—மூலப்ரக்ருதிக்கப்பால் வேதபர்வதத்தில் நின்றுமுண்டாய்ப்பெருகுகிற விரஜை என்றுபெயரையுடைய ஶ்ரேஷ்டமான நதியை த்யாநிக்கக்கடவன். அதற்குமேல் தேஜோமயமாய், அளவில்லாமல் பரந்து மோக்ஷமென்று சொல்லப்படுகிற பரமாகாசமுண்டு. அதற்கு உத்பத்தி விநாசங்கள் முதலிய தோஷங்கள் கிடையாது. ஸ்வயம்ப்ரகாசமாய், அங்குள்ளவர்களுக்கு அபரிமிதமான ஸுகத்தையுண்டுபண்ணுகிறதாய் அத்யந்த மநுகூலமாயிருக்கும். அங்கு அநேகமான இடங்கள் ஸுகஜநகங்களாய் இருக்கின்றன, அங்கு தேசங்க

ளும் ஊர்களும் பெரிய பட்டணங்களு மிருக்கின்றன. அங்குள்ள புருஷர்கள் எல்லாரும் ஸுவர்ணம்போல் ஸௌந்தர்யமுடையவர்களாய், எப்போதும் வேதாத்யயநம் பண்ணிக்கொண்டு சாந்தமூர்த்திகளாய், ப்ரக்ருதிஸம்பந்த மடியாகவந்த ஜநநமரண சூந்யராய்; இஸ் ஸம்ஸாரத்தில் திரும்பி வராமல் அங்கே யிருந்து பகவதநுபவம் பண்ணிக்கொண் டிருக்கிறார்கள். இவைகளை யெல்லாம் த்யாகிக்கக் கடவன். க௮,௯.

తన్మధ్యే నగరం దివ్యం వైకుణ్ఠంనామ నామతః॥ ౧౯.

చన్ద్రకాన్తమయై ర్నిత్యై ర్విమానై ర్బహుభి ర్వృతమ్।
సర్వవర్ణమయై స్సౌధై ర్నానారత్నైశ్చ శోభితమ్॥ ౨౦.

దివ్యరత్నమయై శ్శుభ్రైః ప్రాకారై ర్గోపురై ర్యుతమ్।
నానామణిమయై ర్దీప్రగృహపఙ్క్తిభి రావృతమ్॥ ౨౧.

శక్రచాపౌఘసఙ్కాశైః ప్రాగ్రైస్సౌధైస్సముచ్ఛ్రితమ్।
వివస్వత్కోటిసఙ్కాశై స్తోరణై రుపశోభితమ్॥ ౨౨.

సుధాకరసహస్రాభైః పురుషైరుపశోభితమ్।
సర్వేచతుర్భుజా శ్శుద్ధా స్సర్వేశ సమవిగ్రహాః॥ ౨౩.

శఙ్ఖచక్రధరా స్సర్వే స్రగ్విణః పీతవాససః।
అనురజ్యన్తి దేవేశం భక్త్యా భృత్యా రసేన వై॥ ౨౪.

ప్రాతరుద్యత్సహస్రాంశుకోటీశతసమప్రభాః।
సర్వే లక్షణసంపన్నాః పద్మహస్తాశ్చతుర్భుజాః॥ ౨౫

అనిశం భక్తిభిశ్శ్రీశ మర్చయన్తి చ కేశవమ్।
ఆరూఢయౌవనా స్సర్వే నార్యశ్చ పురుషాస్తథా॥ ౨౬.

தன்மத்யேநகரம்திவ்யம்வைகுண்டம்நாமநாமத:|| க௯.

சந்த்ரகாந்தமயைர்நித்யைர்விமானைர்பஹுபிர்வ்ருதம்|
ஸர்வவர்ணமயைஸ்ஸௌதைர்நாநாரத்னைஸ்சசோபிதம்|| ௨0.

திவ்யரத்னமயைஸ்ஸுப்ரை: ப்ராகாரைர்கோபுரைர்யுதம்|
நாநாமணிமயைர்தீப்ரக்ருஹபங்க்திபிராவ்ருதம்|| ௨க.

சக்ரசாபௌகஸங்காசை:ப்ராக்ரைஸ்ஸௌதைஸ்ஸமுச்ச்ரிதம்|
விவஸ்வத்கோடிஸங்காசை ஸ்தோரணைருபசோபிதம்||     ௨௨

ஸூதாகரஸஹஸ்ராபை: புருஷைருபசோபிதம்|
ஸர்வேசதுர் புஜாஸ்ஸூத்தாஸ்ஸ்வாத்மேச ஸமவிக்ரஹா:|
சங்கசக்ரதராஸ்ஸர்வே ஸ்ரக்விண: பீதவாஸஸ:||     ௨௩

அநுரஜ்யந்திதேவேசம் பக்த்யாப்ருத்யஸேநவை|
ப்ராதருத்யத்ஸஹஸ்ராம்சுகோடிசதஸமப்ரபா: ||     ௨௪.

ஸர்வேலக்ஷண ஸம்பந்நா: பத்மஹஸ்தாஸ்சதுர்புஜா:|
அநிசம்பக்திபிஸ்ஸ்ரீச மர்ச்சயந்திசகேசவம்||     ௨௫

ஆரூடயௌவநாஸ்ஸர்வே நார்யஸ்சபுருஷாஸ்ததா|
மோதந்தேபரமேவ்யோம்நி சாச்வதேப்ரபுகிங்கரா:||     ௨௬.

தா-ம்.—அந்ததேசத்தில் ஸ்ரீவைகுண்டமென்று ஒரு பட்டணமுண்டு. அங்கு சந்த்ரகாந்த மணிகளிழைத்த விமானங்களும், உயர்ந்த ரத்நங்களினால் கட்டப்பட்ட கோபுரங்களும் ப்ராகாரங்களும், பலவிதமான மணிகளிழைத்து விசித்திரமாய் அநேகமான இந்த்ர தநுஸ்ஸூக்கள் கூடினாற்போலிருக்கிற உப்பரிகைகளும், ஒரேகாலத்தில் கோடிஸூர்யர்களுதித்தாற்போல் விளங்காநின்ற கோபுரதுவாரங்களும் சூழ்ந்துவிளங்குகின்றன. அங்குள்ள புருஷர்களெல்லாம் அநேக சந்த்ரனொடொத்த காந்தியுடையவர்களாப், பரமாத்மாவைப்போல் நாலு திருக்கைகளையுடையவர்களாய், சங்கம் சக்ரம் வநமாலை பீதாம்பரங்களையணிந்தவர்களாய், பக்தியுடன் கைங்கர்யம் செய்து பரமாத்மாவை ஆநந்திப்பிக்கிறார்கள். அங்குள்ள ஸ்த்ரீகளும்அப்போதுஉதயமான அநேகங்கோடிஸூர்யர்கள்போன்ற காந்தியயுடையவர்களாய், ஸர்வலக்ஷணங்களையுமுடையவர்களாய், தாமரைப்பூக்களை நான்கு திருக்கைகளிலுடையவர்களாய், ஸ்ரிய: பதியான ஸ்ரீமந் நாராயணனை அத்யந்த பக்தியுக்தராய் ஆராதிக்கிறார்கள். ஸ்த்ரீகளும் புருஷர்களும் எப்போதும் யௌவநத்தையுடையவர்களாய்த் தங்கள் ஸ்வாமியான பரமாத்மாவுக்குக் கைங்கர்யத்தைச்செய்துகொண்டு ஆநந்தித்திருக்கிறார்கள்.     ௨௬ ௭:

మోదన్తే పరమే వ్యోమ్ని శాశ్వతే ప్రభుకిఙ్కరాః।
తన్మధ్యే మన్దిరం దివ్యం ప్రాసాద శతసఙ్కులమ్ ॥     ౨౭.

మణిప్రాకార సంశోభి చతుర్ద్వార సమన్వితమ్ ।
చణ్డాది ద్వారపాలైశ్చ కుముదాద్యైశ్చ రక్షితమ్॥ ౨౮.
నానా రత్నమయైర్దివ్యైర్గృహముఖ్యైస్సుశోభితమ్।

தந்மத்யேமந்திரம்திவ்யம் ப்ராஸாதசதஸங்குலம்|
மணிப்ராகாரஸம்சோபி சதுர்த்வாரஸமந்விதம்|| ௨௭.

சண்டாதித்வாரபாலைஶ்ச குமுதாத்யைஶ்சரக்ஷிதம்,
நாநாரத்நமயைர்திவ்யைர் க்ருஹமுக்யைஸ்ஸுசோபிதம். ௨௮.

தா-ம்.—அந்த ஸ்ரீ வைகுண்டமென்கிற திவ்யநகரத்தின் மத்தியில் அநேக மண்டபங்கள், ரத்நங்களிழைத்தப்ராகாரங்கள் இவைகளோடுகூடியதாய், நாலுகோபுரத்வாரங்களையுடைய கோயிலிருக்கிறது. அந்தக்கோயிலை + சண்டன் முதலிய த்வாரபாலர்களும் ‡ குமுதன் முதலியவர்களும் ரக்ஷிக்கிறார்கள். அதின் நடுவில் அநேகவிதமானரத்நங்களிழைத்த மாளிகைகள் இருக்கின்றன. ௨௭௮.

మధ్యే మణిమయం దివ్యం సహస్రస్తమ్భసంయుతమ్॥ ౨౯.
నానారత్నవితానాఢ్యై శ్చిత్రితం సుసుఖాస్పదమ్ ।
దివ్య చన్దన కర్పూరైః కుఙ్కుమాద్యై స్సుశోభితమ్ ॥ ౩౦॥
దివ్యాప్సరోగణై ర్నిత్యై స్సేవితం సతతం శుభైః ।

மத்யேமணிமயம்திவ்யம் ஸஹஸ்ரஸ்தம்பஸம்யுதம்|
நாநாரத்நவிதாநௌகைஶ்சித்ரிதம்ஸுஸுகாஸ்பதம்|| ௨௯.
திவ்யசந்தநகர்பூரை꞉ குங்குமாத்யைஸ்ஸுசோபிதம்|
திவ்யாப்ஸரோகணைர்நித்யை ஸ்ஸேவிதம்ஸததம்சுபை꞉|| ௩௦.

தா-ம்.—அந்தமாளிகைகளின் மத்தியில் ரத்நங்களினால் கட்டப்பட்டு ஆஶ்சர்யகரமாய், ஆயிரம்கால்களையுடையதாய், அநேகவிதமான மணிகளினால் செய்யப்பட்ட மேற்கட்டுகளினால் விசித்ரமாய், மிகவு மாநந்தஜநகமான மண்டபமிருக்கிறது. அது ஶ்ரேஷ்டமான சந்தனம் பச்சைக்கற்பூரம் குங்குமப்பூ முதலிய வாஸனைத்ரவ்யங்களினால் பரிமளித்துக்கொண்டிருக்கிறது. அங்கு ஸர்வாலங்கார பூஷிதைகளாய் அழகான அப்ஸர ஸ்த்ரீகள்எப்போதும் வாஸம்பண்ணுகிறார்கள். ௩௦௧.

+ சண்டன், ப்ரசண்டன், பத்ரன், ஸுபத்ரன், ஜயன், விஜயன், தாதா, விதாதா, இவர்களெண்மரும் த்வாரபாலர்கள்.

‡ குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமநன் சங்குகர்ணன், ஸர்வநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டன், இவர்கள் கணாதிபர்கள்.

మధ్యే సింహాసనం దివ్యం ధర్మాద్యై స్సూరిభిర్వృతమ్॥ 3౧.
వేదత్రయమయం దివ్యం సాఙ్గోపాఙ్గ పరిచ్ఛదమ్ ।
తన్మధ్యేఽష్టదళం పద్మ మష్టాక్షరమయం పరమ్॥ 3౨.
అకారః కర్ణికా తత్ర స్వరవ్యఞ్జన సంయుతః ।

மத்யேஸிம்ஹாஸநம்திவ்யம் தர்மாத்யைஸ்ஸூரிபிர்வ்ருதம்|
வேதத்ரயமயம்திவ்யம் ஸாங்கோபாங்கபரிச்சதம்|| ௩௧.
தந்மத்யேஷ்டதளம்பத்ம மஷ்டாக்ஷரமயம்பரம்|
அகாரஃகர்ணிகாதத்ர ஸ்வரவ்யஞ்ஜநஸம்யுதஃ|| ௩௨.

தா-ம்.—அண்டமண்டபத்தின் மத்தியில் மூன்று வேதஸ்வரூபமாய், ஸமஸ்தாவயவங்களினாலும் ஸமஸ்தாலங்காரங்களினாலும் பரிபூர்ணமாய், * தர்மம் முதலிய நித்யஸூரிகளினால் சூழப்பட்ட அத்புதமான ஸிம்ஹாஸநமிருக்கிறது. அதின்நடுவில் ஸ்ரீமதஷ்டாக்ஷரஸ்வரூபமாய் ஸர்வோத்க்ருஷ்டமாய் எட்டு இதழ்களையுடைய கமலமிருக்கிறது. அதின்நடுவில் அச்சு ஹல்லு இந்த அக்ஷரங்களாகிறதாதுகளோடுகூடிய அகாரஸ்வரூபமான கர்ணிகை யிருக்கிறது. ௩௨ ௭.

తస్మిన్ననన్తపర్యఙ్కే ఫణారత్న విచిత్రితే ॥ 33.
ధ్యాయే న్నివిష్ట మాత్మేశ మీశ్వర్యా జగత్శ్రియా ।
ఇన్దీవరదళశ్యామం పద్మపత్రనిభేక్షణమ్ ॥ 3౪॥
శ్లక్ష్ణ నాసం లసద్గణ్డ సుభ్రూవల్లియుగాన్వితమ్ ।
ప్రాతరుద్యత్సహస్రాంశుప్రాయకుణ్డలశోభితమ్ ॥ 3౫.
సంపూర్ణచన్ద్రప్రతిమ స్మితయుక్తశుభాననమ్ ।
మహాహనుం ప్రోన్నతాంసం దీర్ఘబాహుచతుష్టయమ్॥ 3౬.
మహోరస్కం స్నిగ్ధవర్ణం కోమలావయవోజ్జ్వలమ్ ।
సుస్నిగ్ధనీలకేశాన్త మన్తరాకబరీ కృతమ్ ॥ 3౭.
శఙ్ఖచక్ర గదాఖడ్గ శార్ఙ్గాద్యైరాయుధైర్యుతమ్ ।
అర్కబిమ్బ సహస్రాభకిరీటేన విరాజితమ్ ॥ 3౮.

---

* தர்மம், ஜ்ஞாநம், வைராக்யம், ஐஶ்வர்யம், அதர்மம், அஜ்ஞாநம், அவைராக்யம, அநைஶ்வர்யம், இந்த எண்மரும் திவ்யஸிம்ஹாஸநத்தின் கால்கள்.

దివ్యచన్దనలిప్తాఙ్గం పీతవస్త్రం శుభావ్యయమ్ ॥
యువాకుమారం దివ్యాఙ్గం శుద్ధసత్వమనోహరమ్ ॥ ౩౯.
కౌస్తుభోద్భాసితోరస్కం వనమాలావిభూషితమ్ ।
కేయూరహారకటకనూపురాద్యైరలఙ్కృతమ్ ॥ ౪౦.
స్నిగ్ధరక్తారవిన్దాభపాదహస్తామ్బుజాన్వితమ్ ।
కన్దర్పకోటిలావణ్యం జగన్మోహనవిగ్రహమ్ ॥ ౪౧.
సమానోత్కృష్టరహితం రూపౌదార్యగుణాదిభిః ।
ప్రాతరుద్యత్సహస్రాంశుసదృశా స్వేన తేజసా ॥ ౪౨.
తస్యైవ సదృశీ దేవీ శీలరూపగుణాదిభిః ।
సర్వలక్షణసంపన్నా సర్వాభరణభూషితా । ౪౩.
సుధాబ్ధిఫేనసఙ్కాశ దివ్యవస్త్రేణ శోభితా ॥
సుస్నిగ్ధనీలకుటిలకేశభారైస్సుశోభితా ॥ ౪౪.
చతుర్భుజైర్విరాజన్తీ కేయూరాఙ్గదభూషణైః ।
హేమపద్మం మాతులుఙ్గముద్వహన్తీ కరద్వయే ॥ ౪౫.
ఇతరాభ్యాం వహన్తీ సా భర్తుః పాదామ్బుజద్వయమ్ ।
ఏవం భూమిశ్చ నీళా చ పార్శ్వయోస్సముపస్థితే ॥ ౪౬.
గృహీతచామరా దివ్యాశ్శక్తయోఽష్టదళేషు చ ।
విమలోత్కర్షిణీ జ్ఞానా క్రియా యోగా తథైవ చ ॥ ౪౭.
ప్రహ్వీ సత్యా తథేశానా మహిష్యస్సముపస్థితాః ।
ఏవం వైకుణ్ఠనాథోఽసౌ రాజతే పరమే పదే ॥ ౪౮
సేవ్యమానస్సదా నిత్యైర్ముక్తైర్భోగపరాయణైః ।
ఏవం విచిన్తయేన్నిత్యం పరే వ్యోమ్ని మహేశ్వరమ్ ॥ ౪౯.

தஸ்மின்னந்தபர்யங்கே பரமாத்மவிசிஷ்டதர்மிணி|| ௫௫.
தயா யோகவிஷ்டமாத்மேச மீஸ்வராயாஜகதஸ்ஸ்ரியா |

இந்தீவரதளஶ்யாமம் பத்மபத்ரநிபேக்ஷணம்|| ஙச.

ஶ்லக்ஷ்ணநாஸம்லஸத்கண்ட ஸுப்ரூவல்ஶியுகாந்விதம்|
ப்ராதருத்யத்ஸஹஸ்ராம்சு ப்ராயகுண்டலசோபிதம்|| ஙரு.
ஸம்பூர்ணசந்த்ரப்ரதிம ஸ்மிதயுக்தசுபாநநம்|
மஹாஹநும்ப்ரோந்நதாம்ஸம் தீர்க்கபாஹுசதுஷ்டயம்|| ஙசா.

மஹோரஸ்கம்ஸ்நிக்தவர்ணம் கோமலாவயவோஜ்வலம்|
ஸுஸ்நிக்தநீலகேசாந்த மந்தாரகபரீக்ருதம்|| ஙஎ.

சங்கசக்ரகதாகட்க சார்ங்காத்யைராயுதைர்யுதம்|
அர்க்கபிம்பஸஹஸ்ராப கிரீடேநவிராஜிதம்|| ஙஅ.

திவ்யசந்தநலிப்தாங்கம் பீதவஸ்த்ரம் சுபாஹ்வயம்|
யுவாகுமாரம்திவ்யாங்கம் சுத்தஸத்வமநோஹரம்|| ஙகூ.

கௌஸ்துபோத்பாஸிதோரஸ்கம் வநமாலாவிபூஷிதம்|
கேயூரஹாரகடக நூபுராத்யைரலங்க்ருதம்|| சய.

ஸ்நிக்தரக்தாரவிந்தாப பாதஹஸ்தாம்புஜாந்விதம்|
கந்தர்பகோடிலாவண்ய ஜகந்மோஹநவிக்ரஹம்|| சக.

ஸமாநோத்க்ருஷ்டரஹிதம் ரூபௌதார்யகுணாதிபி:|
ப்ராதருத்யத்ஸஹஸ்ராம்சு ஸத்ருசாஸ்வேநதேஜஸா|| சஉ.

தஸ்யைவஸத்ருசீதேவீ சீலரூபகுணாதிபி:|
ஸர்வலக்ஷணஸம்பந்நா ஸர்வாபரணபூஷிதா|| சங.

ஸுதாப்திபேநஸங்காச திவ்யவஸ்த்ரேணசோபிதா|
ஸுஸ்நிக்தநீலகுடில கேசபாரைஸ்ஸுசோபிதா|| சச.

சதுர்புஜைர்விராஜந்தீ கேயூராங்கதபூஷணை:|
ஹேமபத்மம் மாதுலுங்க முத்வஹந்தீகரத்வயே|| சரு.

இதராப்யாம் வஹந்தீஸா பர்த்து: பாதாம்புஜத்வயம்|
ஏவம்பூமிஶ்சநீளாச பார்ச்வயோஸ்ஸமுபஸ்திதே|| சசா.

க்ருஹீதசாமராதிவ்யாஶ் ஶக்தயோஷ்டதளேஷுச|
விமலோத்கர்ஷிணீ ஜ்ஞாநா க்ரியாயோகாததைவச|| சஎ.

ப்ரஹ்வீஸத்யாததேசாநா மஹிஷ்யஸ்ஸமுபஸ்திதா:|
ஏவம் வைகுண்டநாதோஸௌ ராஜதே பரமேபதே|| சஅ.

ஸேவ்யமாநஸ்ஸதா நித்யைர் முக்தைர்போகபராயணை:|
ஏவம் விசிந்தயேந்நித்யம் பரேவ்யோம்நி மஹேஸ்வரம்|| ௪௯.

தா-ம்.—அந்தக்கர்ணிகையின் மத்தியில் திருவநந்தாழ்வான் தன் படங்களிலுள்ள மணிகளின் காந்தியினால் விசித்ரமான அழகை யுடையவராய் எழுந்தருளியிருக்கிறார். அந்தத் திருவநந்தாழ்வானாகி ற படுக்கையின்மேல் தனக்குப்பத்நியான ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன்கூட எழுந்தருளியிருக்கிறஜகதீஸ்வரனை, ஸ்ரீமந்நாராயணனை த்யாநம் செய்யக்கடவன். அந்த ஸர்வேஸ்வரன் தாமரைப்பூவினிதழ்போல் நீண்டழகிய திருக்கண்களையும், அழகிய நீண்டமூக்கையும், அழகிய கபோலத்தையும், கொடிபோன்ற புருவத்தையும், பூர்ணசந்த்ரன் போல் வெளுத்த புன்சிரிப்பையுடைய திருமுகமண்டலத்தையும், நீண்டு பருத்திருக்கிற தாடையையும், உயர்ந்த தோள்களையும், நீண்டநான்கு திருக்கைகளையும், விசாலமாய் உயர்ந்திருக்கிற திரு மார்பையும், ம்ருதுவான மற்ற அவயவங்களையுமுடையவராய், ம்ருது வாய் கறுத்து உள்ளே சொருகப்பட்டிருக்கிற மயிர் முடியையுடைய வராய், சங்கம், சக்ரம், கதை, கத்தி, தநுஸ்ஸு, இவைமுதலிய ஆயு தங்களையும், ஆயிரம் பாலஸூர்யர்களுக்கு ஸமாநமான காந்தியை யுடைய குண்டலம், ஆயிரம் ஸூர்யர்களோடொத்த கிரீடம், பீதாம் பரம், கௌஸ்துபமணி, வநமாலை, தோள்வளை, முத்துமாலை, தோ டா, அரைநூல்மாலை, இவைமுதலிய திருவாபரணங்களையுமணிந்து, உத்தமமான சந்தநத்தினால் பரிமளித்துக்கொண்டு யௌவநாவஸ் தையையும் கௌமாராவஸ்தையையு முடையதாய், சுத்தஸத்வமய மாய் அத்புதமாய் அழகாய் கரிநெய்தலினிதழ்போல் ஸ்யாமமாய், கோடிமந்மதன்போன்ற லாவண்யத்தையுடையதாய் ஜகத்தைமோ ஹிப்பியாநின்ற திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவராய் எழுந்தரு ளியிருக்கிறார். ஸௌந்தர்யம், ஔதார்யம் முதலான குணங்களில் இவருக்கொத்தாரும் மிக்காருமில்லை; இவர் அபரிமிதமான குணங்க ளையும், பாலஸூர்யன்போன்ற தேஜஸ்ஸையுமுடையவர். ஸ்ரீமஹால க்ஷ்மியும், ஸௌந்தர்யத்தினாலும் மற்றகுணங்களினாலும் ஸ்ரீமந்நாரா யணனோடொத்தவளாய், ஸமஸ்த கல்யாணகுணபரிபூர்ணையாய், ஸம ஸ்தமான ஆபரணங்களையும், திருப்பாற்கடல்நுரைபோல் வெளுத்து ஸ்ரேஷ்டமாயிருக்கிற திருப்பரியட்டத்தையுமணிந்து, கறுத்து சுரு ண்டு அழகியதாயிருக்கிற மயிர்களினாலும், தோள்வளை பாஜீமுத லிய பூஷணங்களணிந்த நான்கு திருக்கைகளினாலும் ஸ்ரேஷ்டமான

சோபையையுடையளாய். ஒரு திருக்கையில் ஸுவர்ணமயமான த்தாமரஸ புஷ்பத்தையும், மற்றொருதிருக்கையில் வில்வத்தையும் தரித்து, மற்ற இரண்டு திருக்கைகளினால் தன்பதியான ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அவருடன்கூட அந்தத் திருவநந்தாழ்வான் மேலே எழுந்தருளியிருக்கிறாள். இவ்விதமாகவே பூமிதேவியும் நீளாதேவியும் எம்பெருமானுடைய இரண்டு பக்கங்களிலு மெழுந்தருளியிருக்கிறார்கள். மற்றமஹிஷிகளும் பக்கங்களிலெழுந்தருளியிருக்கிறார்கள். ஆஸநகமலத்தில் எட்டு இதழ்களிலும் விமலை, உத்கர்ஷிணி, ஜ்ஞானை, க்ரியை, யோகை, ப்ரஹ்வீ, ஸத்யை, என்ற எட்டு சக்திகள் நின்று சாமரம் வீசுகின்றார்கள். நித்யரும் முக்தரும் பரமாநந்த யுக்தராய் எப்போதும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்கிறார்கள். இவர்களையெல்லாம் இவ்விதமாகவே த்யாநம் செய்யக்கடவன். சகூ.

తస్యైవ వ్యూహభేదాశ్చ విభవార్చాదిమూర్తయః ।
హిరణ్మయాభ్యాం హస్తాభ్యాం శుద్ధాభ్యాం ప్రవిరాజితాః॥ ౫౦.

தஸ்யைவவ்யூஹபேதாஶ்ச விபவார்ச் சாதிமூர்த்தய:|
ஹிரண்மயாப்யாம் ஹஸ்தாப்யாம் சுத்தாப்யாம் ப்ரவிராஜிதா:॥ ருo.

தா-ம்.—அந்தப்பரவாஸுதேவனுடைய (அநிருத்தன் கேசவன் முதலிய) வ்யூஹாவதாரங்களும், (பரசுராமன் முதலிய) ஆவேசாவதாரங்களும், (மத்ஸ்யம், கூர்மம் முதலிய) விபவாவதாரங்களும், (அழகிய மணவாளன்முதலிய) அர்ச்சாவதாரங்களும் ஸுவர்ணம் போலழகியதாய் நிர்மலமாயிருக்கிற இரண்டு திருக்கைகளையுடையவர்களாய் அந்தலோகத்தில் எழுந்தருளியிருக்கிறார்கள்.

శఙ్ఖచక్రగదాఖడ్గశార్ఙ్గలాఙ్గలముద్గరాః।
పరితః పురుషాకారా రక్షన్తి హరిమన్దిరమ్ ॥ ౫౧.

சங்கசக்ரகதா கட்க சார்ங்கலாங்கல முத்கரா:|
பரித: புருஷாகாரா ரக்ஷந்திஹரி மந்திரம்|| ருக.

தா-ம்.—சங்கம், சக்ரம், கதை, கட்கம், (கத்தி) சார்ங்கம் (தநுஸ்ஸு), கலப்பை, உலக்கை, இந்த ஆயுதங்கள் புருஷஸ்வரூபத்தை யெடுத்துக்கொண்டு பகவந் மந்திரத்தைச் சுற்றும் ரக்ஷிக்கிறார்கள்.

வ்யூஹம் முதலிய அவதாரங்கள் எழுந்தருளியிருக்கும் ஸ்தாநம்.

తస్య వైకుణ్ఠనాథస్య ప్రాచ్యాం శుభతరో విభోః ।
వాసుదేవస్య విమలో లోకో వైశ్వానరప్రభః ॥ ౫౨.

தஸ்யவைகுண்ட நாதஸ்ய ப்ராச்யாம் சுபதரோவிபோ:|
வாஸுதேவஸ்யவிமலோ லோகோவைச்வாநரப்ரப:|| ௫௨.

தா-ம்.—அந்த ஸ்ரீ வைகுண்டநாதனுடைய கோயிலுக்குக்கிழக்குத்திக்கில் மங்களகரமாய், சுத்தஸத்வமயமாய், அக்நிபோல் காந்தியையுடைத்தான வாஸுதேவனுடைய கோயில் இருக்கிறது. ௫௨.

దక్షిణే తస్య విమలో దివ్యస్సంకర్షణాలయః ।
పశ్చిమే తస్య పూజ్యస్తు శుభం ప్రద్యుమ్నమన్దిరమ్ ॥ ౫౩.

தக்ஷிணே தஸ்யவிமலோ திவ்யஸ்ஸங்கர்ஷணாலய:|
பஶ்சிமே தஸ்யபூஜ்யந்து சுபம்ப்ரத்யும்நமந்திரம்|| ௫௩.

தா-ம்.—ஸ்ரீ வைகுண்டநாதன் கோயிலுக்குத்தெற்குத்திக்கில் சுத்தஸத்வமயமாய்ஆஶ்சர்யகரமான ஸங்கர்ஷணன்கோயில் இருக்கிறது. மேற்குதிக்கில் சுபகரமாய் கொண்டாடத்தகுந்ததான ப்ரத்யும்நன் கோயில் இருக்கிறது. ௫௩.

ఉదీచ్యామనిరుద్ధస్య లోకః కోటీన్దుసన్నిభః ।
ఈశాన్యాం కాన్తినిలయ ఆగ్నేయ్యాం లక్ష్మీమన్దిరమ్ ॥ ౫౪.

உதீச்யாமநிருத்தஸ்ய லோக: கோடீந்து ஸந்நிப:|
ஈசாந்யாம் காந்திநிலய ஆக்நேய்யாம் லக்ஷ்மிமந்திரம்|| ௫௪.

தா-ம்.—ஸ்ரீவைகுண்டநாதன் கோயிலுக்கு வடக்குதிக்கில் கோடிசந்த்ரனோடொத்த காந்தியையுடையதான அநிருத்தன்கோயிலும், ஈசாந்ய (வடகிழக்கு) மூலையில் (அநிருத்தனுடைய பத்நியான) காந்திதேவியின்கோயிலும், அக்நி (தென்கிழக்கு) மூலையில் (வாஸுதேவனுடைய பத்நியான) லக்ஷ்மீதேவியின் கோயிலும் இருக்கின்றன. ௫௪.

సారస్వతస్తు నైరృత్యాం వాయవ్యాం రతిమన్దిరమ్ ।
ఇదమావరణం తస్య ప్రథమం పరమస్య వై ॥ ౫౫.

ஸாரஸ்வதந்துநைர்ருத்யாம் வாயவ்யாம்ரதிமந்திரம்|
இதமாவரணம்தஸ்ய ப்ரதமம்பரமஸ்யவை|| ௫௫.

தா-ம்.—நைர்ருதி (தென்மேற்கு) மூலையில் (ஸங்கர்ஷணனுடைய பத்நியான) ஸாஸ்வதிதேவியின் கோயிலும், வாயு (வடமேற்கு) மூலையில் (ப்ரத்யும்நனுடைய பத்நியான) ரதிதேவியின் கோயிலும் இருக்கின்றன. இவைகள் ஸ்ரீ வைகுண்டநாதன் கோயிலின் முதல்ப்ராகாரத்திலிருக்கின்றன. ௫௫.

ద్వితీయావరణం తస్య వైకుణ్ఠస్య శుభోన్నతమ్।
అనన్తసత్యధామాఖ్య విష్వక్సేన గజాననాః ॥ ౫౬.
శఙ్ఖపద్మనిధీ తార్క్ష్యో లోకా నిత్యం సుఖప్రదాః।

த்விதீயாவரணம்தஸ்ய வைகுண்டஸ்யசுபோந்நதம்|
அநந்தஸத்யதாமாக்ய விஷ்வக்ஸேநகஜாநநா:|| ௫௬.
சங்கபத்மநிதீதார்க்ஷ்யோ லோகாநித்யம்ஸுகப்ரதா:|

தா-ம்.—ஸ்ரீ வைகுண்டநாதன் கோயிலின் மங்களகரமான இரண்டாவது ப்ராகாரத்தில் அநந்தன், ஸத்யதாமன், விஷ்வக்ஸேநர், கஜாநநன்; சங்கநிதி, பத்மநிதி, கருத்மான், இவர்களுடைய ஸுககரங்களான கோயில்களிருக்கின்றன. ௫௬௨.

తృతీయావరణం తస్య కేశవాదిమ మూర్తిభిః। ౫౭.

த்ருதீயாவரணம்தஸ்ய கேசவாதிமூர்த்திபி:| ௫௭.

தா-ம்.—ஸ்ரீ வைகுண்டநாதன் கோயிலின் மூன்றாவது ப்ராகாரத்தில் கேசவன் முதல் தாமோதரனளவான பன்னிரண்டு திருநாமங்களின் கோயில்களிருக்கின்றன. ௫௭.

అధిష్ఠితా దివ్యలోకాస్తత్ర స్సఙ్కర్షణాదిభిః।

அதிஷ்டிதாதிவ்யலோகா ஸ்தத்ரஸ்ஸங்கர்ஷணாதிபி:|

தா-ம்.—ஸ்ரீ வைகுண்டநாதன் கோயிலின் நான்காவது ப்ராகாரத்தில் முதல்ப்ராகாரத்திற்சொன்ன ஸங்கர்ஷணன் முதலியவர்களின் கோயில்களிருக்கின்றன. ௫௭௨

మత్స్యః కూర్మో వరాహశ్చ నారసింహోఽథ వామనః। ౫౮
జామదగ్న్యో దాశరథిః కృష్ణశ్చైవ సురేశ్వరః।
దధిభక్తో హయగ్రీవః పఞ్చమావరణే స్థితాః॥ ౫౯.

